# கசடதபற




ஓவியம்: பிகாஸோ

மே 1973 **32** 35 காசு

# கேரள கவிதா

ஃபிரான்சிஸ் தங்கதுரை

திரு. அய்யப்ப பணிக்கர் வெளியிடும் 'கேரள கவிதா' என்ற கேரளக் கவிதை ஏடு, சென்னையில் ஏப்ரல் 15ம் தேதியன்று வெளியிடப்பட்டது. அந்தக் கவிதை ஏட்டில், தமிழ்க் கவிதைகள் சிலவும், 'தமிழும் அதன் கவிதையும்' என்ற தலைப்பில் ஒரு கட்டுரையும் வெளியாகியிருந்தன. அந்த நிகழ்ச்சியிலேயே அஃ ஏட்டின் மிகச் சமீப இதழும் வெளியிடப் பட்டது. கேரள கவிதாவை நாராயணப்பிள்ளை வெளியிட்டார். அஃ இதழை, (தர்மு அரூப் சீவராமின் கவிதைத் தொகுப்பு) திரு பத்மனபன் வெளியிட்டார்.

இந்த நிகழ்ச்சியையொட்டி 'கவிதை மொழி' என்றால் என்ன என்ற கருத்தரங்கு காலையிலும், இரண்டு மொழிகளிலும் கவிதை வாசிப்பு மாலையிலும் நடைபெற்றது.

சென்னையில் இருக்கும் தமிழ்க் கவிஞர்களுக்கு திரு. கோவிந்தன் மிகவும் பரிச்சயமானவர்—அர்த்தச் செறிவுள்ள பேச்சுக்கும் நட்புக்கும். கோவிந்தன் வெளியிட்டு வரும் சமீக்ஷா தமிழ்ச் சிறுஏடுகளுக்குச் சிறந்த துணையேடு. அய்யப்பபணிக்கரின் கேரள கவிதா அறிமுகமான பின்பு மலையாள இலக்கிய முயற்சிகளில் நமக்குள்ள மதிப்பும், ஈடுபாடும் அதிகரிக்கவே செய்கிறது.

காலைக் கருத்தரங்கில் கலந்து கொண்ட மலையாளக் கவிஞர்கள் பேராசிரியர்கள் அனைவரும் கவிதையைப் பற்றி அதன் மொழியைப் பற்றித் தெளிவாகவும் சுருக்கமாகவும் பேசினார்கள்.

நகுலன், தர்மு அரூப் சீவராம், ஞானக் கூத்தன் ஆகியோர் தமிழில் பேசினார்கள். தமிழர்கள் தமிழிலும் மலையாளிகள் மலையாளத்திலும் பேசியது முதலில் ஏற்றுக் கொள்ளக் கூடியதாக இருந்தாலும், மலையாளப் பேச்சைப் புரிந்து கொள்வது சிரமமாக முடிவில் தெரிந்தது.

ஒரு மொழி தெரிந்து விடுவதாலேயே அந்த மொழியில் ஒன்றைப் படைத்துவிட முடியாது என்று மலையாளக் கவிஞர் ஒருவர் குறிப்பிட்டார். ஒலிச்சிதைவுகளுக்கும், ஆங்கிலச் சொற்களுக்கும் இடையே, சுய விளக்கத் திறனான அறிவைக் கொண்டு மலையாளக் கவிஞர்கள் என்ன கூறுகிறார்கள் என்பதை நிதானிக்க முடிந்தது.

ஆங்கிலம் போதிக்கும் கேரளப் பேராசிரியர்கள் தமிழ்ப் பேராசிரியர்களைக் காட்டிலும் தனது தாய் மொழியில் தெளிவு கூடுதலாக உள்ளவர்கள் என்று முதலில் தோன்றியது.

உதாரணமாகக் குமாரப்பிள்ளையின் விஷயத்தெளிவு அவர் அதைச் சொல்லுகிற முறையிலும் தெளிவாக இருந்தது. விசாரித்துப்பார்த்ததில் இப்படிப்பட்ட பேராசிரியர்கள் அங்கேயும் சிலராகத்தான் இருக்கிறார்கள் என்று தெரிந்தது. பேராசிரியர் அளவில் வரும் தெளிவு மாணவர்களுக்குப் பயன் படக்கூடும் என்பதால் இங்கு இவ்வளவு சொல்லப்படுகிறது. குமாரப்பிள்ளை அப்படி என்ன கவிதையின் மொழியைப் பற்றி சொல்லி விட்டார் என்று கேட்டுப் பார்த்தால் ஒரு பாஷையின் ஸ்வாதந்தரிய இயல்பையே வலியுறுத்தினர் என்று புரிந்து கொள்ள வேண்டும். அவர் சொன்னார்: 'கவிதை என்பது பாஷைக்குள் ஒரு பாஷை'. நகுலன் பேசும் பொழுது,

சுப்பிரமணிய பாரதியாரின்

தீக்குள் விரலை வைத்தால் நந்தலாலா
உன்னைத்
தீண்டும் இன்பம் தோன்றுதடா
நந்தலாலா

என்ற கவிதை வரியை மேற்கோளாக்கி, 'தீக்குள் விரலை வைத்தால்' என்ன அனுபவம் கிட்டுகிறது? அது எப்படி இசைவான அனுபவமாகிறது என்பதை அந்த அனுபவத்தை அடைந்து பார்த்தால்தான் தெரியும் என்று சொன்னதாகப் புரிந்தது. பாரதியாரின் கவிதை வரியில் பாஷை எந்த அளவில் செல்ல முடிந்தது என்று கேட்கப்பட்ட பொழுது

நாலு மூலை ஓம குண்டம்
நடுவே கனகசபை

என்று ஹோமத் தீயைக் கனக சபையின் நடனமாக்கும் கிராமியப் பாடலின் சூட்சுமம் நினைவுக்கு வந்தது.

மொழி என்று அறியப்படுகிற எல்லாவற்றையும் ஏற்றுக் கொண்டு, பயன்படுத்திக் கொண்டு பின்பு புறக்கணித்து விடுகிறது கவிதையின் பாஷை என்று ஞானக்கூத்தன் குறிப்பிட்டார்.

பாஷையைக் கலைஞர்கள் தங்கள் சொந்த நலனுக்குப் பயன் படுத்திக் கொண்டு விடக் கூடாது என்று தர்மு அரூப் சீவராம் குறிப்பிட்டார்.

கூட்டத்தில் இருந்த இதர கவிஞர்கள் எழுத்தாளர்கள் அனைவருக்கும் கவிதையின் பாஷை என்பது பற்றித் தங்கள் தங்கள் கருத்துக்களைக் கொண்டிருப்பார்கள் என்றாலும் ஆய்வு முறையில் உபாயமாகக் காணப்படும் ஒன்றைக் குறித்துச் சிந்தித்தல் பயனுடையதாக இருந்தது.

மாலையில் இரண்டு மொழிகளிலும் அந்தந்த மொழிக் கவிஞர்கள் தங்கள் கவிதைகளை வாசித்தது அன்றைய மாலைக்கு நல்ல அனுபவமாக அமைந்தது.

மலையாள அறிவாளிகள் நன்றாகப் பேசக் கூடியவர்கள்தான் என்றாலும் பேசுவதற்கு விருப்பப்படுவதில்லை. ஸ்ரீ கண்டன் நாயரைப் பேசச் சொன்னதற்கு 'நான் ஏன் பேச வேண்டும். நான் ஒரு 'பர்ஃபாமர்' என்று தெரிவித்து விட்டார். அவர் அப்படிச் சொன்னதின் நியாயம் கவிதை வாசிப்பின்போது உறுதிப்பட்டது.

மலையாளக் கவிதை வாசிப்புக்கும் தமிழ்க் கவிதை வாசிப்புக்கும் நிறைய வேற்றுமை இருக்கிறது. தாளிலிருந்து கவிதையை வாய்க்கு மாற்றுவதில் புதுக் கவிஞர்களில் சிலருக்காவது சிரமம் இருக்கும். கவிதை என்பது அச்செழுத்துக்களால் கண்ணால் பார்க்கப்படுவது மட்டுமல்ல என்பதைக் காலையில் கேரளக் கவிஞர் வலியுறுத்தியிருந்தார்.

கேரளக் கவிதையின் வாசிப்பில் ஒரு அளிப்பு முறை கையாளப் படுகிறது. பெரும்பாலும் நீட்டோலை வாசிப்பாக இருந்துவரும் தமிழ்க் கவிதை வாசிப்பு முறையிலிருந்து மறுத்து ஒரு இயல்பான பேச்சுக்கு மாறி வருகிறதென்று புதுக் கவிதை வாசிப்பைக் குறிப்பிடலாம். இதிலிருந்து மாறுபட்டு, கேரளக் கவிதை தனது வாசிப்புக்குச் சில யுக்திகளால் விசேடித்த சூழலைத் தயாரித்துக் கொள்ளுகிறது.

**அக்னி**

இலக்கிய இதழ்

இதற்கு விலையில்லை

மே 1973ல் வெளிவரும்

முகவரி:

போஜன் கோபாலன்

அச்சனக்கல்

கேத்தி அஞ்சல்

நீலகிரி

---

புத்தகங்கள் அடுக்கிய பெரிய மரப்பீரோக்கள் சூழ அமைந்த சென்னை மஹாஜன சபையில் இந்தக் கவிதை வாசிப்பு நிகழும் போது, கவிதை தனது நிகழ்வில் அப்பொழுதைய சூழலிலிருந்து விடுபட, கேட்பாரின் கவனத்தைத் தவிர வேறொரு நிச்சயமான மார்க்கம் இல்லாமல் போய்விடுகிறது.

கேட்பாரை முதலில் அவரது மனச்சார்பிலிருந்து அவரை விடுவித்துத் தனது சார்புக்குக்கொண்டுவர கவிதைக்குள்ளேயே போதிய ஆஸ்தி பாஸ்திகள் இருந்தாக வேண்டும். அவ்வாறான அம்சங்களில் தகுந்த ஒன்றை சாராம்சமான கவிதைக்கும் கேட்பார்க்கும் இடையில் அறிமுகப் படுத்துவதால் அணுக்கமும் தொலைவும் சம்பவிக்கும் என்று சொல்லலாம்.

கேரளக் கவிதை ஒன்று வாசிக்கப்படும் பொழுது, அந்தக் கவிதைக்குள் உறுப்பாக விளங்கிய இரண்டு அம்சங்களை ஸ்தூலமாக்கியதும் மனச் சார்பு நிலை மாறி அமைந்தது. அதாவது வாசித்த கவிஞர், கையில் ஒரு தழைக் கொத்தை மாந்திரீக முறையில் அசைத்து, அதற்கேற்ற தொனியில் கவிதையை வாசிக்கும் பொழுது கவிதையின் ஒரு அம்சத்தைத் தனியாகவும் சாராம்சத்தைத் தனியாகவும் கவனிக்க முடிந்தது. இந்த அளிப்பு முறையினால் மனம் வசீகரிக்கப்பட்டாலும் கருத்துருவாகக் காதில் விழும் கவிதையின் தாரதம்யத்தை முன்னதின் பாதிப்பு இல்லாமலே கவனிக்கவும் முடிகிறது. இதனால் கவிதையைக் கேட்கும் பலதரப்பாளருக்கும் கவிதை தனது தொடர்பை அந்தந்த மட்டத்தில் வைத்துக் கொள்ள முடிகிறது. சில சமயங்களில் மிகவும் நொய்ந்த கவிதை, அதா

வது கவிஞனின் நோக்கம் ஓரளவேயாக இருக்கும் கவிதை, கூட வாசிப்பின் பொழுது அந்தக் கால நீட்சி வரைக்கும் கேட்பவர்களைப் பரவசப்படுத்தக் கூடும். ஸ்ரீ கண்டன் நாயர் சுந்தரராமசாமியின் தமிழ்க் கவிதையை (உபயம்) வாசித்த பொழுது, அவர் கொடுத்த தொனி நிரவிய இசை பாராட்டத் தகுந்ததாக இருந்தது.

அய்யப்ப பணிக்கரின் கவிதை வாசிக்கப் படும் பொழுது ஸ்லோகம் போன்ற பகுதி வரும் சமயம், மேடையில் இன்னும் இருவரும் கலந்து கொண்டதில் கவிதைக்குள்ளிருந்த அந்தப் பண்பு பெரிது படுத்திக் காட்டப்பட்டது கவர்ச்சியாக இருந்தது. இதிலும் சாராம்சமான கவிதை தனது தனித்துவத்தை விட்டுக் கொடாமலே இருந்தது.

தமிழ்க் கவிதையின் வாசிப்புப் பற்றிப் புதுக் கவிஞர்கள் இதுவரைக்கும் அக்கறை காட்டவில்லை.

ஆயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக தமிழ் இலக்கியம் சமயச் சார்பு கொண்டிருந்ததால், கவிதைகளை வழிபாட்டிசையாகப் படிப்பது மரபாகி, அதுவேதான் எல்லாவற்றுக்கும் என்று கருதுவது தமிழர் வழக்கமாக இருந்து வருகிறது.

எழுத்துருவான எதையும் எப்படியும் படிக்கலாம் என்பதும், வழிபாட்டிசை தவிரவும் வழிகள் உண்டு என்பதும் புலப்படாமல் போனது வருத்தத்திற்குரியது. மேலும் கவிதைகளை 'எழுதுவது' 'அச்சேற்றுவது' ஆகிய காரியங்களே பெரியனவாகத் தோற்றம் கொடுத்து, மௌன வாசிப்பு போன்ற கொள்கைகள் உருவானது, ஒரு காலகட்டத்தில் ஒரு வகைக் கவிதைகளுக்குத் தவிர்க்க முடியாத நிலைதான். ஆங்கிலக் கவிஞர்களான யேட்ஸும் எலியட்டும் கவிதைகளை உரக்க வாசித்தும் கொடுத்திருக்கிருர்கள் என்ற தகவல்கூட நமக்குக் கிட்டியிருக்கவில்லை. ஒரு நொய்ந்த கவிதையை வாசிப்பின் பொழுது வலுவூட்டுவதில் எலியட் தேர்ச்சி உள்ளவராம். எலியட்டின் கவிதை ரெகார்டுகள் கவிதை வாசிப்புக்கும் அவர் கொடுத்த உடன்பாட்டுச் சான்றுகளாகும்.

புதுக் கவிதைகளும் வாசிக்கப் படவேண்டும் என்ற நோக்கம் இந்தச் சமயத்தில் இயக்கம் பெறுவது வரவேற்கப்பட வேண்டும். வட இந்தியக் கவி சம்மேளனங்களும், கேரளக் கவியரங்கமும் தமிழ்ப் புதுக் கவிஞர்களுக்குப் பின்பற்றக் கூடியதாக இல்லை. முன்னது தமிழ் நாட்டிலேயே வழக்கில் இருந்து வரும் கவியரங்குகளோடு நட்புள்ளது. பின்னது அது பயன்படுத்தும் ஓசையைக் கருதிப் பயன் தராதது. இவ்விரண்டுக்கும் மாறுபட்டதாகவும், தமிழ்க் கவி மனப்பான்மைக்குப் பொருந்தியதாகவும் இருக்கக் கூடியது அந்தந்தக் கவிதையின் உள்ளியல்புக் கேற்ப உரத்து வெளியிடுவதாக இருக்கக்கூடும்.

மாலைக் கவியரங்கத்தில் திரு. கோவிந்தனின் கவிதையை (மலையாள மொழியின் எழுச்சிக்குப் பாடும் கருத்துள்ளது) ஸ்ரீ கண்டன் நாயர் பாடிய பொழுது, அதைப் பேச்சு முறையில் வாசித்திருந்தால் நன்ருக இருந்திருக்கும் என்று தோன்றியதிலிருந்து. தமிழ்க் கவிதையின் வாசிப்பையும் ஊகிக்க முடிந்தது.

நகுலன், தர்மு அரூப் சீவராம், ஷண்முக சுப்பையா, K. V. ராமசாமி, ஆர். வி. சுப்ரமணியம், மதுசூதன், மஹாகணபதி, பாலகுமாரன், வைதீஸ்வரன், ஞானக்கூத்தன் ஆகியோர் கவிதை வாசிப்பு சிறப்பாக அமைந்திருந்தது.

கவிதையின் வாசிப்புக்கு முன்பு 'how much new is the new?' என்ற விவாதத்தில் சி. சு. செல்லப்பா, குமாரப்பிள்ளை, கோவிந்தன் ஆகியவர்கள் பேசினுர்கள். கோவிந்தன் மலையாளத்தில் பேசியதிலிருந்து இலக்கியக் கொள்கைகள் சிலவற்றில் அவருக்குள்ள அக்கறையை முழுவதுமாகத் தெரிந்து கொள்ள முடியவில்லை. தொடக்க உரையாற்றி சி. சு. செல்லப்பா புதுக் கவிதையின் வரலாற்றை ஆராய்ந்தவாறு புதுக் கவிதையின் முதல் இமேஜிஸ்டு தர்மு அரூப சீவ்ராம் என்றும் புதுக்கவிதை வளர்ச்சி அடைந்து வருவதாகவும், அது பல்வேறு முகமுடையதாக ஆகிக் கொண்டிருப்பதாயும் குறிப்பிட்டார். ஒரு தனி உரையாடலில் 'எத்தனை நாள் இலக்கியத்தைப் பிராணவாயுக் கூண்டில வைத்திருப்பது?' என்று கேட்ட திரு ந. பிச்சமூர்த்தி விவாதத்துக்கும், வாசிப்புக்கும் தலைமை ஏற்றது இந்த ஆண்டின் குறிப்பிடத் தகுந்த நிகழ்ச்சியாகும்.

வரலாற்றின் அடிப்படையில் ஒற்றுமையுள்ள இரண்டு மொழிக் கவிஞர்கள் தங்கள் கவிதைகளையும் கருத்துக்களையும் பகிர்ந்து கொண்டது மிகவும் முக்கியமான காரியமாகும். ஆனுல் தமிழ்ப்பக்கத்தில் இதுபோன்ற நிகழ்ச்சிகளை அமைக்கும் பொழுது இன்னும் விரிந்த அளவிலும் முன்கூட்டித் தெரிவிப்பதற்கும் தகுந்த இலக்கிய அமைப்புகள் இல்லாமையால் இந்த நிகழ்ச்சிகள் உரிய சிறப்புப்பெறவில்லை. ஆனுல ஒன்று நிகழ்ந்ததே அதுதான் இப்பொழுது வரவேற்கத் தகுந்தது என்று சொல்ல வேண்டும். ●

# மூன்று பண்டிதர்களும் காலஞ்சென்ற ஒரு சிங்கமும்

ஜி. சங்கரப்பிள்ளை

[யாருமற்ற மேடை. விசேஷமான எந்த அலங்காரமும் தேவையில்லை. மேடையின் நடுவே உயர்ந்த ஒரு சிறிய தலம்-பெரிய ஒரு பீடம் போல அதன்மேலேறிச் செல்ல மூன்று பக்கங்களிலும் படிகள். நாடக ஆரம்பத்தில் சபையின் பின்னுலிருந்து ஒரு கூப்பாடு-அரண்மனை விதூஷகனுடைய உற்சாகமான சப்தம். அவன் தனக்குத்தானே முணுமுணுத்துக் கொள்கிருற் போல உரக்கத் தனிமொழியாடிக் கொண்டு சபையினூடே நடந்து வந்து மேடையில் பிரவேசிக்கிருன்.]

விதூ: ராஜகுமாரா!...ராஜ...குமாரா...எங்கே போனுன் இந்தக் குமாரன்? கதை சொல்லிக் கொண்டும், நடையாய் நடந்தும் தளர்ச்சி யடைந்தது நானல்லவோ? சை! கிரகக்கோளாறு! இனி மேல் சென்று அரசனிடம் என்ன கூறுவது? ஓ, இல்லாவிடில் அவர் கேட்பது! சொல்வது! அரண்மனைக்குள் ஏதோ அறைக்குள் இருந்து கொண்டு, மரணத்தைக் காண்பதற்காக மட்டும் கண்களைத் திறந்து, அதன் மிதியடிச் சப்தத்தைக் கேட்பதற்காக மட்டும் காதுகளைத் தீட்டிக் கொண்டு...மரத்துப் போகச் செய்யும் அந்த வாசனைக்காக வேண்டி மட்டுமே நாசியைக் கூர்மையாக்கிக் கொண்டு......ஓ......இனிமேல்.. இனிமேல் என்ன? (மீண்டும் பொறுமையிழந்து) ஆனுல் குமாரன் அகப்பட வேண்டுமே. (சபையினருக்கிடையில் உன்னிப்பாக நோக்குகிருன்) மாடி பஸ்களிலும், உயர்ந்த மாளிகைகளிலும், சிலைகளிலும், மதுக்கடைகளிலும், வேசி வீடுகளிலும், இந்தக் கொடிய காட்டில் எங்கே சென்று தேடுவேன்? (மீண்டும் நடக்கிருன்; பார்க்கிருன்,) ஙா? எங்கேயோ ஒளிந்து கொண்டிருக்கிருள். நான் என் கடமையைச் செய்கிறேன். (உரக்க) குமாரா! கேட்டுக் கொள்! (பதிலுக்காகச் சற்றுக் காத்து நிற்கிருன்) 'கதைகள் சொல்லிச் சொல்லி என் குமாரனை அறிவாளியாக்கு' என்று அரசனின் கட்டளை! கட்டளையிட்டால் சித்தம் என்று சொல்வதைத்தவிர இந்த எளியவன் என்ன சொல்ல. சித்தம் சித்தம் அடியேன் என்றேன் நான். அப்புறம் நூருண்டுகள் நடந்தேன்......நகரம் நாடு மக்கள் எல்லாவற்றையும் கடந்து பின்னிட்டு குமாரா! இதோ கதையின பாக்கி.... (சபையினூடே பார்த்து) இந்தக் காட்டுக்குள் எங்கேயோ பதுங்கி இருக்கிருயல்லவோ? கேட்டுக் கொள்.

(பஞ்ச தந்திரக் கதை சொல்கிற மாதிரி) பண்டைய நாளில் ஒரு நாட்டில் பண்டிதர் மூவர் இருந்தனராம் கண்டயிடமெல்லாம் அறிவு விலாசம் கொண்டவர்—

(ஆஹா! இந்த 'ண்ட' வந்து விழுகிற அமைப்பைப் பாருங்கள்!)

செண்டை கொட்டினராம்

செண்டை......செண்டை......

(சட்டென்று நிதானித்துக் கேட்டு)

செண்டெயின் சப்தம் கேட்கிறதல்லவா? தூர, இந்தக் காட்டின் கரடு முரடான ஏதோ வழியிடையில்...வழிச் சந்திப்பில் கோஷங்கள், சினிமாப் பிரச்சாரங்கள் அலறல்கள் ஆர்ப்பாட்டங்கள் இடையே (கேட்டதாக பாவித்து) சரிதான்: சரி, சரி......அவர்கள் வருகிருர்கள்! குமாரா! மூன்று பண்டிதர்கள் சாஸ்திர விற்பன்னர்கள்-கலா நிபுணர்கள்! அபூர்வ பண்டித சிகாமணிகள். தத்தம் செண்டையைக் கொட்டியவாறு, வேறு யாரும் பாடாத தத்தம் புகழுரைகளைச் சொல்லியவாறு, அதோ; அதோ...

[சபையின் பின்னாலேயே கையைச் சுட்டிக் காட்டுகிறான். அங்கே மூன்றிடங்களிலிருந்து மூன்று பண்டிதர்கள் பிரவேசிக்கிறார்கள். அவர்களுடைய வேஷம் ஏதோ வேல் சண்டை விளையாட்டுக்காரர்களைப் போல் இருக்கிறது. நல்ல கடும் சிவப்பு நிறத்தில் அகலமான துணிகள் கொண்டு தலையில் தலைப்பாகைகள். ஒவ்வொருவருடைய தோளிலும் ஒரு செண்டை. அதோடு பெரிய ஒவ்வொரு மூட்டையும்- செண்டைகளைக் கொட்டிக் கொண்டே வருகிறார்கள். ஏறக்குறைய வேல் சண்டை விளையாட்டுக்காரர்களைப் போலவே முன்னால் அடிவைத்து நகருகிறார்கள். பேசுகிற விதம் மருந்து வியாபாரியை நினைவு படுத்துகிறது. மேடையில் தோன்றுவது வரை செண்டை கொட்டியும், கேோடிக்குரல்களை எழுப்பியும் தங்களைச் சுற்றியுள்ள சபையினரிடம் பேசிக் கொண்டு வருகிறார்கள்]

ப1: மாண்புமிகு மஹா ஜனங்களே!

ப : மதிப்பிற்குரிய நல்லிதய உலகமே!

ப3: சர்வ விஞ்ஞானமும் ஆவல் உடையவர்களே!

ப1: சாஸ்திரத்தின் பூர்வார்ஜித சொத்து முழுதும் எங்கே? இங்கே இங்கே... இங்கே......(சுமையைத் தூக்கிக் காட்டுகிறான்)

ப3: கிரகங்களுக்கு—விண் வெளிக்குப் போக......பரிச்சயமுற மந்திர சித்தி? (தனது மூட்டையைத் தூக்கி) இங்கே... இங்கே...இங்கே...

ப2: பலவிதமான ரோக உபாதைகளே! விலகுங்கள்! அதற்கான மருந்தோ? இதில்......இதில்......

[மறுபடியும் 'மாண்புமிகு மகா ஜனங்களே' இத்யாதி. அவர்கள் மூவரும் மேடையில் மூன்று பக்கங்களில் வருகிறார்கள். இதற்கிடையில் விதூஷகன் சபையின் முதல் வரிசையில் சம்மணம் போட்டு உட்கார்ந்து விடுகிறான். ப1 இன்னுமொரு தன்னுடைய செண்டையைக் கொட்டிவிட்டு, சுமையிலிருந்து ஏராளமான ஸர்ட்டிஃபிக்கெற்றுகளை உருவியெடுத்து ஒவ்வொன்றாக சபையில் சுற்றித் திரிந்து காட்டி' சிலவற்றைக் கொஞ்சம் வாசித்து சபையினரை மூட்டைக்குள் திரும்பி வைக்கிறான். அவன் பேசுவதை நிறுத்தும் போது மற்ற இருவரும் செண்டைகளைக் கொட்டுவதும் ஜனங்களோடு பேசியவாறு வட்டம் சுற்றுவதுமாக இருக்கிறார்]

ப1: (ஸர்ட்டிஃபிக்கெற்றிலிருந்து வாசிக்கிறான்) We are really fortunate to have the eminent scholar and scientist Mr.....(அதை மடித்து மூட்டைக்குள் வைத்துக் கொண்டு) அது பழையது! (இன்னொன்றை எடுத்து) This society deems it a previlege to confer upon him the title of ... (அதையும் மடிக்கிறான். திருப்தியோடு சிரித்து விட்டு) எத்தனை! எத்தனை! (கையிலெடுத்த எல்லா ஸெர்ட்டிஃபிக்கெற்றுகளையும் திரும்பவும் சுமைக்குள் வைக்கிறான். ஆனந்த பரவசனாக மேடை முழுவதும் செண்டை கொட்டிக் கொண்டு சுற்றி வருகிறான். இதே சமயம் மூன்றாமவர் தன்னுடைய மூட்டையிலிருந்து சில பத்திரங்களை உருவியெடுக்கிறான். சிலவற்றை அவன் வாசிக்கிறான்.)

ப3: (பத்திரத்தைப் பார்த்து பிரபல விஞ்ஞானி நகரத்தில்! நிறுத்துகிறான். வெற்றி வீரனைப் போல சபையை ஒரு முறை பார்த்துவிட்டுத் தலைப்பை இன்னொருமுறை படிக்கிறான். திரும்பவும் வாசிப்பு) வான சாஸ்திரத்தில் மட்டுமல்ல. (இன்னொரு ஸ்வரத்தில் இன்னும் கொஞ்சம் வாசித்து) இது பழக்கம் வளர்ந்ததும், வளர்ந்து கொண்டிருப்பதும், இன்னும் வளர வேண்டியிருப்பதுமான சமூகவியல் சாஸ்திரங்களிலெல்லாம் நிபுணனாகிய, நிபுணனாகிய...... ஏது, ஹா, ஹா, நிபுணன்! good (பத்திரங்களைத் திருப்பி மூட்டைக்குள் அடுக்கி வைத்து விட்டு முதல்வனைப் போல வட்டம் சுற்றுகிறான்.)

ப2: (தன்னுடைய மூட்டையிலிருந்து ஒரு பட்டத்தை எடுக்கிறான். அதன் நூலைப் பெரிய ஓர் பந்தாகக் கையில் வைத்துக் கொள்கிறான்.) இதைப் பார்த்தீர்களா? இந்த நூல் பந்து, அது பிரிந்து பிரிந்து வரும். என்னுடைய பட்டம். பல வர்ணாலங்காரம். அது உயர்ந்து உயர்ந்து போகும். வேறு உலகங்களுக்கு; யாருமறியா ஆகாய வீதிகளில், புதிய அறிவுகளைத் தேடி-வாலால் வானவில்களை வீசி விதைத்து-எல்லையற்ற பெருவெளியில்-சூடோ? என் கையில; என்னுடைய கையில்,

(பட்டத்தைத் திருப்பிக் கொண்டு மற்றவர்களைப் போல செண்டையைக் கொட்டியவாறு மேடையைச் சுற்றுகிறார். பழைய வசனங்களை இன்னுமொரு முறை உருப்போடுகிறார்கள். ஒரே சமயத்தில் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்கிறார்கள். முதன் முறையாகப் பார்ப்பதைப் போல ஆச்சர்யத்தை வெளிப்படுத்துகிறார்கள். கை குலுக்கிக் கொள்கிறார்கள். ஒருவரையொருவர் அறிமுகப் படுத்திக் கொள்கிறார்கள்.]

ப 1: நான்...

ப 2: தெரியும், தெரியும். நான்......

ப 1; பின்னே எனக்கு மட்டும் தெரியாதோ?

ப 2; சந்தோஷம்... சந்தோஷம்

[ப மூன்றுமவனிடமும் அவன் இவனிடமும்; ப 2 மூன்றுமவனிடமும் அவன் இவனிடமும் இதே உபசார வார்த்தைகள். அவை உண்மையில் வெறும் உதட்டளவில் என்று தோன்றுகிற விதத்தில் பலமுறை கூறப்பட்ட ஒரு மந்திரம் போல உணர்ச்சியற்று மடிய வேண்டும்.] மூவரும் ஒரே சமயத்தில் நாம் இப்பிரபஞ்ச சிற்பிகள். மும்மூர்த்திகள்.

சர்வ சாஸ்திர வித்தகர்கள்

இடையருமல் இவ்வுலகின் எல்லைகளைத்

தவறின்றி விளக்கிடும்

சக்தி யார்? நபர் யார்?

நான்... நான்... நான்...

(மூவரும் பிரிகிருர்கள்)

ப 1; (இரண்டாமவனை மட்டும் மேடையின் ஒரு ஓரத்திற்கு அழைத்துச் சென்று நமக்குள் உண்மையைச் சொல்லிக் கொள்ளலாமல்லவா? (மூன்றுமவனைச் சுட்டிக் காட்டி) அவன் ஒரு செல்லாக் காசு, (இரண்டாமவன் தலையை ஆட்டுகிருன். அவர்கள் பூடகமாகச் சிரிக்கிருர்கள். இந்த சமயத்தில் மூன்றுமவன் 'நாம் இப் பிரபஞ்ச சிற்பிகள்' என்றவாறு சுற்றிக் கொண்டிருக்கிருன். அவன் நிறுத்தியதும் முதற் பண்டிதன் அதைத் தொடர்கிருன். அவன் தூரத்தில் சென்றதும் இரண்டாமவன் மூன்றுமவனருகில் வருகிருன்)

ப 2: (மூன்றுமவனிடம்) உண்மை என்ன தெரியுமா? வெளியில் சொல்ல வேண்டாம். அவன் பூஜ்யம் என்ற சமிக்ஞை. முதல்வன் சுற்றியவாறு வரும்போது இரண்டாமவன் அது போலச் சுற்றத் தொடங்குகிருன் மூன்றுமவன் முதல்வனை விலக்கி நிறுத்துகிருர்.)

ப 3: உள்ளதைச் சொன்னல் அவனிருக்கிருனே, அவன் தலையலங்காரம், ஹூம், வெறும் அலங்காரம் மட்டும் தான்! (மூன்று பேரும் மூன்று திசைகளில் சென்று, ரகசியம் சொல்வது போல சபையினரிடம்)

உள்ளதைச் சொன்னல் உறியும் சிரிக்கும். சிரிக்கட்டும்; ஆனல் சொல்லாமல் இருப்பதா? இவரிருவருக்கும், இந்த உலகில் அறிவு ஒரு வெற்று வார்த்தை உண்மை. உண்மை.

(விதூஷகன் கைகொட்டிப் பாராட்டுத் தெரிவிக்கிருன்)

ப 1: ஹா! என் சீடன்.

ப 2: எனது வழி நடப்பான்.

ப 3: என்னுடைய கூட்டாளி.

(மூவரும் விதூஷகனைத் தூக்கி மேடையில் நிறுத்துகிருர்கள். அவனுக்குத் திரும்பிப் போய்விட்டால் பரவாயில்லையென்றிருக்கிறது)

ப 3: சொல். நான் தானே அறிவாளி?

ப 2: சே! நான் தான்...

ப 1: நீ என் சீடன். சொல். என் செருப்பு வாரை அவிழ்க்கக் கூட உனக்குத் தகுதியில்லையென்று, ம், தயங்காதே!

விதூ: நான் என்ன சொல்ல வேண்டும்?

ப 1: நான்தான் பண்டித ராஜன் என்று.

ப 2: நான்.

ப 3: நான்.

விதூ: ராஜாவானல் பீடத்தில் ஏற வேண்டும். பேரறிவுப் பீடம்.

ப 3: அதுவா கஷ்டம்? இதோ!

(ஓடிப் போய் பீடத்தின் மேல் ஏற முயற்சிக்கிருன். முதல்வனும் இரண்டாமவனும் தடுக்கிருர்கள்).

ப 1: ஏய்! இரு, இரு.

ப 2: அப்படிப் போனல் எப்படி?

ப 3: (விதூஷகனிடம்) பார்த்தாயா? இவர்கள்.

விதூ: அப்படியானல் இனிமேல் ஆயுதப் பரீட்சை.

ப 1: ஆயுதமா?

விதூ: ஆமாம்! (மூவருடைய தலைகளையும் தொட்டு) இது இதைவிட பெரிய ஆயுதம் எது? அதை வைத்துத்தானே இந்தக் காட்டில் போர்கள்! வதங்கள், சதிகள், கொலைகள்—பின்னலிருந்து குத்திச் சாய்க்கும் சிநேக பலிகள், மகாயுத்தங்கள்.

ப 3 : பரீட்சை நடக்கட்டும்.

ப 2 : அதற்கு வழி?

விதூ: நான் வழி செய்கிறேன்.

(அவர்களிடமிருந்து அகன்று அவ்விடம் முழுவதையும் சுற்றி வந்து) இந்தக் கொடிய காட்டில்—

தெரிகிறதா?

பண்டிதர்கள்: ம்ம்..

விதூ : பழங்காலத்தில் ஒரு மிருகராஜன் இருந்தான்.

பண்டிதர்கள் : பழங்காலத்தில்!

விதூ : கதையில் அப்படித்தான் சொல்ல வேண்டும். ஆனால் அவ்வளவு பழங் காலத்திலல்ல,

ப 1 : பிறகு?

விதூ : அவனிக் காட்டில் அலைந்து திரிந் தான். கானகத்தின் அமைதி தொலைந்தது, இங்கே உயிரினங்களி டையே நட்பு அழிந்தது. இணைகள் பிரிந்து இறந்தன. சோலைகள் இரத் தம் பாய்ந்து சிவந்தன. அமங்கள மாகக் கருந்திரி எரிந்தது. முடிந்தது காட்டின் நாகரிகம்.

ப 2 : ஹா! ஐயோ! ஆஹா! பாவம்!

ப 1 : சரித்திரத்தின் இருண்ட அத்யாயம்! ச்சு! ச்சு!

ப 3 : அப்புறம்.

விதூ : கடைசியில் ஒரு காட்டுவாசி அவனைக் கொன்றான்! தன் வர்க்கத்தைக் கொன் றொடுக்கிய அந்த நாசகாலியை ஓரம் பின் முனையால் அவன் 'டக்'...

(பண்டிதர் மூவர்க்கும் ஆசுவாசம் பிறக் கும் பாவம்)

ப 3 : கொன்றானே?

ப 2 : செத்ததோ?

விதூ : கொன்றான், கொன்றான், செத்தது.

ப 1 : அதற்கும் இதற்கும்—காலஞ்சென்ற அந்தச் சிங்கத்திற்கும் நமக்குமிடையில்

விதூ : உண்டு. தொடர்புண்டு.

[மூவரையும் அழைத்துக் கொண்டு பீடத் தின் படிகளிலேறி, மேடையின் பின் பகுதி யைக் காட்டி தெரியவில்லையா!

ப 1 : எலும்புகள்.

ப 2 : உடலற்ற தலை...காலஞ்சென்ற சிங்கத் தின் மூடிய கண்கள்... அனாதையாக! நிராதாவாக!

ப 3 : அதனுடைய பிடரி ..மேல் தோல்...

விதூ : அதுதான். காட்டு மண்ணில் சிதறி விழுந்த அநேகாயிரம் உடல்கள்மேல் புதிய செடிகள் முளைத்து விட்டன. சில காயும் கனியும் கொடுத்துவிட்டன. ஆனால் இன்னும் அவனுடைய எலும்பு கள்—மண்டையோடு—மேல்தோல்.

ப 1 : அவனுடைய எலும்புகளை நான் ஒன்று சேர்ப்பேன். அதற்கான வித்தையை நானறிவேன். நான் மட்டுமே...இந் தப் பீடம் எனக்கானதே! ஹாய்! பார்த்துக் கொண்டிருங்கள்! (சென் டையைக் கொட்டி, படிகளிலிறங்கி, பின்புறம் ஓடி மறைகிறான். மற்றவர் கள் ஆர்வத்துடன் பார்த்துக்கொண்டு இருக்கிறார்கள்).

ப 2 : சரிதானே! அதோ, அதோ.. அதோ...

(முதல்வன் வெற்றி வீரன் போலத் திரும்பி வருகிறான்)

ப 2 : நானும் சளைத்தவனல்ல. இதோ பார்த்துக் கொள்ளுங்கள். (பின்புறம் ஓடுகிறான்).

ப 1 : மேல்தோல் எடுத்து...ஹே! அந்த வித்தை— அந்த வித்தை எனக்கு... (இரண்டாமவன் வெற்றியுடன் திரும்பி வருகிறான்).

ப 2 : ஒன்று சேர்த்தாயிற்று. நான் சவால் விடுகிறேன். என்னை வெல்ல யாருண்டு? யார்?

ப 3 : நான்! அமர மந்திரம் - புனர்ஜன்ம மந்திரம்-அதையறிவேன் நான். நான் மட்டுமே.

(விதூஷகன் தன் இடத்திற்குப் போக முயற்சிக்கிறான்)

ப 3 : போகாதே. என் வெற்றியை உன் உன் கண்களாலேயே பார். பிறகு—

விதூ : நான் இங்கே யிருந்தே பார்த்துக் கொள்கிறேன் (உட்கார்கிறான்).

ப 3: (தன்னுடைய தலைக்கட்டை அவிழ்த்து முதல்வனிடமும், இரண்டாமவனிட மும்) இதை நிமிர்த்திப் பிடியுங்கள்.

ப 1 : எதற்காக?

ப 3 : எல்லாம் பார்க்கத்தானே போகிறீர் கள்?

ப 2 : என்னால் முடியாது.

ப 3 : அது கூடாது. உங்களுக்கு அதைப் பார்க்க வேண்டாமா?

ப 2 : எதை?

ப 3 : எங்கேயும் போகாமல் இங்கேயே நின்று நான் மந்திரம் ஜபிப்பேன். அப்போது—என் ஞானத்தின் விளைவு உதயமாகும். பேரறிவுப் பீடத்திற்கு நானதிகாரி. அந்தப் பீடத்தின் மேலேயே துணியைப் பிடியுங்கள்...... பிடியுங்கள்— (இருவரையும் கட்டாயப் படுத்திப் பிடித்துக் கொள்ள வைக் கிறான். அவர்கள் ஒரு கதகளி திரைச் சீலையைப் போலத் தலைக்கட்டை அவிழ்த்துப் பிடித்துக் கொண்டிருக் கிறார்கள்).

[மூன்றாமவன் ஒரு படியிறங்கி நின்று. செண்டை கொட்டி மந்திரவாதி போல வட்டம் சுற்றி, சப்தங்களெழுப்பி, மந்திரம் ஜபிக்கிறான். சட்டென்று திரைச் சீலைக்குப் பின்னால் சிங்கத்தின் உக்கிரமான அலறல் திரைச் சீலையைப் பிடித்திருந்தவர்கள் பட் டென்று அசைவற்றுப் போகிறார்கள். மூன்றா மவனின் உயர்த்திய செண்டைக் கம்பு அப் படியே நிற்கிறது. விதூஷகன் தான் உட் கார்ந்திருந்த இடத்திலேயே பாதி எழுந்த வாறிருக்கிறார். மீண்டும் அலறல். திரைச் சீலைக்கு மேலே சிங்கத்தின் நோட்டம்]

விதூ : (பரலோகம் அடைந்த) செத்த சிங் கம் எழுந்து விட்டது! மூடப் பண்டிதர் களே! நீங்கள் எழுப்பி விட்டீர்கள்!

சிங்கம் : (திரைக்குள்ளிருந்தே) என்னை எழுப்பியதார்?

ப 3 : (விக்கி விக்கி) என்னுடைய பாண்டித் யம்...பரீட்சை ... வெற்றி ... ஸர்வக்ஞ பீடம்...

சிங்கம் : (உரக்க பயங்கரமாக வெடித்துச் சிரிக்கிறது) எனக்கு உணவு! இக் கலத்திலே!

ப 3 : ஐயோ! ஐயோ!

சிங் : எனக்கு பட்சணம், பட்சணம்...

[திரைச் சீலையைப் பிடித்திருக்கும் இரு வரையும் மாறிமாறி அணுகி, அவர்களுடைய தலையில் கட்டியிருக்கும் துணியை அவிழ்த்து அவர்களை மூடுகிறது. திரைச் சீலையில் பிடி விட்டுப் போகிறது. சிங்கம் அத்துணியோடு முன்புறமாகப் படிகளில் இறங்குகிறது. மூன்றா மவன் மேடையில் பாதுகாப்பான இடத்திற் குப் பரபரத்துப் பாய்கிறான். சிங்கம் உசசத் தில் வெடித்துச் சிரிக்கிறது. குகையில் சென்று எதிரொலிப்பது போல அது ஒலி பெருக்கியில் முழங்கிக் கேட்கிறது. அதே சமயத்தில் எங்கிருந்தென்றறியாத அசுரத் தனமான ட்ரம் பீட்ஸ். சிங்கம் அடியெடுத்து வைக்கிறது. பிரமை பிடித்த மூன்றாமவன் தளர்ந்து படியில் தடுக்கிக் கீழே விழுகிறான். சிங்கம் அவன் மேல் குரூரமும் பேய்த்தனமு மான சந்தோஷத்துடன் அந்தச் சிவப்புத் துணியை முழுவதும் விரிக்கிறது. அது முடிந்து, முன்னால் சபையின் நேராக நடக் கிறது—அதே சிரிப்புடன் - அதே தாள வாத் யத்துடன்—விதூஷகன் தன் இருப்பிடத்திலி ருந்து குதித்தெழுந்து சபையினரிடம்)

விதூ : பாக்கிக் கதை எனக்குத் தெரியாது. சிங்கம் புனர்ஜன்மமெடுத்து விட்டது! மூடப் பண்டிதர்கள் சண்டையிட்டு அதை எழுப்பி விட்டார்கள், பாமரர் களே! உங்களுடைய வில்களை வளைத்துக் கொள்ளுங்கள்! உங்களு டைய வில்லைத் தொடுத்துக் கொள் ளுங்கள்!... (சபையின் நடுவே கூவிக் கொண்டு ஓடிமறைகிறான். சிங்கம் சபை யினரை நெருங்கிக் கொண்டிருக் கிற விதூஷகனின் கூவல் தேய்ந்து கொண்டிருக்கிறது. அந்தகாரம்)

மலையாளத்திலிருந்து தமிழில் :
ம. ராஜாராம்

---

# வாள்

சா. கந்தசாமி

மென்மையான மேகங்கள் மேற்கிலிருந்து கிழக்காகக் குவிந்து கொண்டிருந்தன. பக்கிரி தலையைக் கொஞ்சம் போல் திருப்பிப் பார்த்தார். ஆற்றோரத்து தென்னை மரங்கள் ஆடுவது நன்றாகத் தெரிந்தது. மறுபடியும் ஒரு முறை பெரும் காற்று வீசப் போகிறது என்று தனக்குத்தானே தீர்மானம் பண்ணிக் கொண்டார். விட்டு விட்டு வீசும் காற்று வேலைக்கு ஓர் அறை கூவல் போல அவருக்குத் தோன்றியது. இடது காலை நன்றாக மரத்தில் அழுத்திக் கொண்டு கையிலிருந்த வாளை கீழே விட்டார். வாள் மரத்தில் கரகரவென்று இழைந்து கொண்டு சென்றது. அறுபட்ட மரத்தின் தூள்கள் சீராகக் கீழே குவிந்தன.

குவிந்த தூள்களில் கால் புதைய நின்று கொண்டிருந்த முருகேசன் இழுத்த வேகத்தோடே வாளை மேலே விட்டான். பக்கிரி ஒருவித அவசரமும் இல்லாதவர்போல, மேற்குப் பக்கத்தைப் பார்த்துக் கொண்டே நிதானமாக வாளை மேலே இழுத்தார். இவன் அவசரம் அவருக்கு எரிச்சலூட்டுவது போல இருந்தது.

ஒன்றாகிக் கொண்டிருந்த மேகங்கள் சிதைந்தோட காற்று வேகமாகத் திடீரென்று வீச ஆரம்பித்தது. சுழன்று செல்லும் காற்று மணலையும் சருகுகளையும் அள்ளிக் கொண்டு சென்றது. பக்கிரி கண்களை சுருக்கிக் கொண்டு முகத்தை இடது புறமாகத் திருப்பியவாறு வாளைக் கீழே விட்டார்.

நிதானமின்றி இறங்கும் வாளைப் பற்றிக் கொண்டு முருகேசன், "என்னங்க மாமா?" என்று கேட்டான்.

"காத்து கிளம்பிடுச்சு" என்று சொல்லிக் கொண்டே வலது கண்ணைக் கசக்கிக் கொண்டு வெற்றிலை எச்சிலைக் கீழே உமிழ்ந்தார்.

"ரெண்டு நாளா கொஞ்சம் காத்துதான் மாமா"

"தண்ணி வர்ர காலமெல்ல" கோவணமாக இருந்த வேட்டியை அவிழ்த்து உதறி முகத்தைத் துடைத்துண்டே, "மேக்கித்துக் காத்து கிளம்பிட்டா, மண்ண வாரிக்கிட்டு வந்துடும்" என்றார்.

"வாள செத்த பிடிங்க மாமா"

"எல, செத்த இருலே"

வேட்டியை உதறிக் காற்றில் பறக்கவிட்டுக் கொண்டு இலுப்ப மரத்தடிக்குச் சென்றார். படபடவென்ற காற்றில் பறக்கும் வேட்டியை வெகு சிரமத்தோடு உருண்டையாகச் சுற்றி இலுப்பை மர வேரில் வைத்து அதன்மேல் கீழேகிடந்த அரைச் செங்கல்லை எடுத்து வைத்தார். கண்களுக்கு மேலே கையைக் குவித்து, மேற்குத் திக்கை நோட்டமிட்டதில் காற்றின் சப்தம் அடங்கிக் கொண்டு வருவது போல இவருக்குத் தோன்றியது. தன்னையும் மீறி பெரிதாகச் சிரித்துக் கொண்டார்.

"காத்தவராயன் பொண்டாட்டியைக்
கட்டிப்போட்டு அடிக்கிறான்
காத்தோ, காத்தோ"

கீழே குனிந்து இரண்டு கையாலும் மணலை அள்ளிப் பறக்கவிட்டு, ஒரு குழந்தையைப்போல மணலில் கால்களால் நீளமாகக் கிழித்துக் கொண்டு திரும்பி வந்து மரத்தின் மேல் நின்றுகொண்டு அரைநாண் கொடியை தளர்த்திக் கொண்டார் பக்கிரி;

மரத்தூள்களின் மேல் முழங்கால்களைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்த முருகேசன் நிமிர்ந்து பார்த்துச் சிரித்தான்.

இவர் இன்னும் கொஞ்சம் கோவணத்தைத் தளர்த்தி இழுத்துவிட்டுக் கொண்டு, "என்னடா, என்னத்தக் கண்டுட்டுச் சிரிக்கற" என்று கேட்டார்.

முழங்காலைச் சுற்றி இருந்த கைகளைப் பிரித்து திமிர் முறித்துக் கொண்டு சொன்னான்:

"சும்மாதாங்க மாமா"

"ஒக்கா, எதுக்கு நீ சிரிக்கறண்ணு எனக்குத் தெரியாதாடா"

அவன் மறுபடியும் சிரித்தான்.

"மாமாவுக்குத் தெரியாதது உண்டா"

குனிந்து மரப்பட்டையை எடுத்து அவன் மேலே வீசினார். அவன் குனிந்து மரத்தூள்களில் கையூன்றி நகர்ந்து கொண்டான். இவர் அவனை அடிக்க மரப்பட்டை தேடுவது போல ஒரு முறை அறு மரத்தின் மேல் கையை அப்படியும் இப்படியுமாக அசைத்துக்

கொண்டு நடந்து சென்றார். இவர் அப்படிச் சென்றது, கோமாளி ஆடுவதுபோல இவனுக்குத் தோன்றியது. ஒரு முனையில், நிற்கும் அவரை, ஆழ்ந்து அவரையே பார்த்துக் கொண்டிருந்தான். இவரும் நின்று, இவன் என்ன செய்கிறான் என்று பார்க்காதது போல பார்க்கத் தொடங்கினார்.

இவன் வாளை ஒரு முறை ஆட்டினான்.

பக்கிரி அதைக் கவனிக்காதது மாதிரி மீசையை மேல் நோக்கித் தள்ளி உருட்டிக் கொண்டிருந்தார். இனி வேலை ஓடாது என்று தன்னுள் சொல்லிக் கொண்டான். கரையேறலாமா என்ற ஒரு எண்ணம் தோன்றியது. ஆனாலும், அதை அடக்கிக் கொண்டு, மரத் தூளில் ஒரு காலை நீட்டி உட்கார்ந்து கொண்டு பீடியைப் பற்ற வைத்துக் கொண்டான். பீடி கருகி புகையாகும் வரையில் பக்கிரியிடமிருந்து குரல் ஏதும் வரவில்லை, இவனுக்கு எரிச்சலாகவும் வெறுப்பாகவும் இருந்தது. வாள்கட்டையை வேகத்துடன் பிடுங்கி இடுப்பில் சொருகிக் கொண்டு கரையேறினான்.

''என்னுல கிளம்பிட்ட''

பக்கிரியின் பார்வை இவன் மேல் இறங்கியது.

''பொழுது காயுதுல்லீங்க மாமா''

பக்கிரி இரு கையும் கொட்டிச் சிரித்தார்.

''இந்த வயசுலியே இம்மாம் தெளிவு எடுக்க ஆரம்பிச்சிட்டா''

''இருந்தாலும், மாமா மாதிரி ஆகமுடியுமா?

பக்கிரி இவனை ஒரு சுற்றுச் சுற்றிவந்தார்.

'மாப்பிள, உன் சாமர்த்தியத்துக்கு எங்கயும் பொழச்சுக்குவ''

முருகேசன் எரிச்சலுடன் வேகமாகத் திரும்பினான். இவன் பார்வை அவர் மேல் இறங்கியது. வார்த்தையெதும் ஆடாமல் வாளை உருவி, மார்பில் சாய்த்துக் கொண்டு மணலில் பாதம் அழுந்தி சுவடுகள் பதிய நடந்தான். இவன் செல்வதை ஒருவிதமான ஏளனத்துடனும் புன்சிரிப்புடனும் பார்த்துக் கொண்டே நின்றார் பக்கிரி. இவன் கொஞ்ச தூரம் சென்றதும், வேட்டியைக் கழுத்தில் சுற்றிக்கொண்டு, அவன் விட்டுச் செல்லும் சுவட்டில் வெகு கவனமாகக் கால்பதித்து சென்றார். இப்படிச் செய்து இயல்பை இழந்து, தாவிச் செல்வதுபோல இருந்தது. நடை பின்னியது.

''போடா போ'' என்று கீழே குனிந்து, கிளிஞ்சலை எடுத்து வீசினார். அது இவன்மேல் படாமல் மணலில் விழுந்தது. இப்படி விழுந்ததில் களிப்புற்றவர் போலத் தலையை அசைத்துக் கொண்டார்.

இம்மாதிரியான வறண்ட ஒரு கோடையில் மாலைப் பொழுதொன்றில் காவிரிக் கரையில் முருகேசன் வந்து சேர்ந்தது இவர் நினைவில் படர்ந்தது. அவன் வெகு தூரத்திலிருந்து நடந்து வருவதுபோலக் களைப்புடன்வந்தான். அவனைப் பார்த்ததுமே, லேசான பிடிமானம் விழுந்தது. அவனுடைய பெரிய தலை, ஒழுங்காகக் கத்தரித்து விடப்பட்ட கிராப்பு. சிறிய மீசை. மார்பு கொள்ளாமல் சுற்றி படர்ந்திருக்கும் மயிர்.

'ஆம்பளைன்னா இப்படித்தான் இருக்கணும்' என்று தன்னுள்ளே சொல்லிக் கொண்டு அவன் தோள்மீது கை வைத்துத் தன்னோடு அணைத்துக் கொண்டார். அவனைப் பற்றி விசாரித்தறிய வேண்டும் என்ற நினைப்பே இவருக்குத் தோன்றவில்லை. அவனுடைய தோற்றமும் தோரணையும் தன்னோடு சரியாக நின்று வாளிழுக்க இவனே தகுதியானவனன் என்ற எண்ணத்தை இவருக்குத் தந்தது. தன்னுடைய தேர்வு சரியானது என்ற திருப்தி ஏற்பட்டபோதும்-அவன் நடவடிக்கைகள் மகிழ்ச்சி தந்தபோதும் பக்கிரி தன்னைத் தானே ரொம்பவும் வியந்து மூன்றும் மனுஷனைப் பாராட்டுவதுபோல வாய்விட்டுப் பாராட்டிக் கொள்வார்.

''முருகேசு''

வாளை கொட்டகையின் முன்னே சுற்றி விட்டு, வெள்ளை நாயைத் தட்டித் தடவிக் கொண்டிருந்தவன் லேசாகத் திரும்பினான்.

''ஏங்க தம்பி, குளிக்கப் போறீங்களா?''

''ஆமாங்க மாமா''

''குளிச்சுட்டு சுருக்கா வாங்க. ஒரு விசயம பேசணும்''

''சரிங்க''

அவன் துண்டை எடுத்து உதறி காசு மறைய முண்டாசுக் கட்டிக் கொண்டு சீட்டியடித்தவாறு, இறக்கத்தில் இறங்கி குளிக்கச் சென்றான்.

அவன் பார்வையிலிருந்து மறையும் வரையில் அப்படியே நின்று கொண்டிருந்த பக்கிரி மெல்ல நடந்து சென்று, எதிரே கிடந்த மரத் துண்டில் கால்களைத் தொங்கப்போட்டு உட்கார்ந்து, ''எலே, தங்கராசு, செத்த வெத்தல எடுத்தாடா'' என்றார்.

தங்கராசு பனைவோலையிலான வெற்றிலைப் பெட்டியைக் கொண்டு போய் வைத்தான். ஒரு கொட்டைப் பாக்கை எடுத்து, பாக்கு வெட்டியில் வைத்து நறுக்கிக் கொண்டு, ''எலே, என்ன கொளம்பு'' என்றார்.

''கொக்குங்க தாத்தா''

"கொக்கா, ஏதுலேடே" பாக்கு வெட்டி யிலிருந்து பாக்கு நழுவியது.

"நம்ப கண்ணியில உழுந்துச்சுத் தாத்தா"

"உன் கண்ணியிலியா"

அவன் கண்கள் பரக்க விரிய கைகளை வேகமாக அசைத்துக் கொண்டு "ரெண்டு உழுந்துச்சீங்க தாத்தா, எடுக்கப் போரச்ச ஒண்ணு கண்ணியை அறுத்துக்கிட்டு போயி டுச்சுங்க தாத்தா"

"இங்க வாடேல"

பக்கிரி அவன் தோள்மீது கைபோட்டு அணைத்துக் கொண்டார்.

"தேவல, உனக்கு ஒண்ணு அம்புட்டுச்சு. நான் உன்னுட்டம் இருக்கச்ச மூணு கண்ணி போட்டேன். மூணுத்தியும் கொக்கு அடிச்சுக் கிட்டு போயிடுச்சு"

கை கொட்டிப் பெரிதாகச் சிரித்தார். சிரிப் பில் எச்சில் இவன் முகத்தில் தெரித்தது. புறங்கையால் துடைத்துக் கொண்டு இவர் பக்கம் திரும்பி ஆச்சரியத்தோடு, "நிஜமா தாத்தா" என்று கேட்டான்.

இவனைத் தொடை இடுக்கில் அணைத்துக் கொண்டு, "நிஜமாகத்தான்" என்று இன்னும் கால்களை குறுக்கிறார். இவன் வியப்புற்று நம்ப மறுப்பதுபோல் பேச்சு ஏதுமின்றி அவரையே பார்த்துக் கொண்டிருந்தான்.

இவர் குனிந்து அவன் கன்னத்தில் முத்த மிட்டார். இவன் குறுஞ்சிரிப்புடன் அவர் மார்பில் மோதி எச்சலைத் துடைத்துக் கொண் டான்.

"எலே, ஒரு சுருட்டுக் கொண்டா"

இவன் நொண்டியடித்துக் கொண்டு சென்றான். நாய், எங்கிருந்தோ ஒரு எலும் பைத் தூக்கிக் கொண்டு ஓடிவந்தது. இவன் வெறும் கையால், அதை விரட்டிக் கொண்டு குடிசைக்குள் சென்று சுருட்டை எடுத்து வந்து தந்தான்.

பக்கிரி சுருட்டைக் கையால் உருட்டிக் கொண்டே பார்வையைத் திருப்பினார். மாலைப் பொழுது மெல்ல அடங்க, மையிருள் கவிழ்ந்து கொண்டிருந்தது. சீரான காற்று. காற்று அடங்குகிறது என்று நினைத்துக் கொண்டார்

துண்டையெடுத்து நன்றாக முறுக்கி முண் டாசுக் கட்டிக் கொண்டு, மீசையைத் திருகி சீட்டியடித்துக் கொண்டு தொடையில் தாளம் போட்டுக்கொண்டு திரும்புகையில் முருகேசன் வேட்டியும் சட்டையும் துண்டும் போட்டுக் கொண்டு வெளியே வந்தான்.

பக்கிரி அவனை ஆழ்ந்து நோக்கினார்.

அவன் ஊர் நோக்கிச் செல்லும் பாதை யில் நடக்க ஆரம்பித்தான். தாளம் நிற்க, மிகவும் சோகமான புன் சிரிப்பு இவரிட மிருந்து வெளிப் பட்டது. வேகமாகத் தலை யசைத்துக் கொண்டார்.

"எங்க மாப்ள பயணம்" குழைவுடனும் எரிச்சலுடனும் இவர் குரல் ஒலித்தது.

முருகேசன் தலையை உயர்த்தி இவரைப் பார்த்தான். சட்டையை நுனியைப் பிடித்து கீழே இழுத்து விட்டுக் கொண்டான். வலது பக்க முடியை ஒரு பக்கமாகக் கை தள்ளியது.

"சும்மாங்க மாமா. வைத்தீஸ்வரன் கோயிலு வரைக்கும்"

"வைத்தீஸ்வரன் கோயிலுக்கா" எரிச்சல் உற்றவர்போல இவனைப் பார்த்தார். தலையை மேலும் கீழுமாகச் சிலுப்பிக் கொண்டு, குத்த வைத்திருந்த ஒரு காலைக் கீழே தொங்கபோட் டுக்கொண்டு, "இங்க செத்த வா" என்றார்.

இவனுக்கு கமலத்தின் நினைவு வந்தது. நான்கு நாட்களாகப் பயணப்பட்டு, தவறிப் போய்க் கொண்டே வந்தது. இன்றும் அது போலவே நடந்து போகுமா? தான் உண்மை யைச் சொல்லி இருக்கக் கூடாதோ என்று தன்னையே கேட்டுக் கொண்டு இவர் பக்கமாக வந்தான்.

"இப்படி மரத்துல குந்து"

இவன் அவருக்கு நேர் எதிரே மாமரத் துண்டில் இரண்டு கால்களையும் தொங்கப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தான்.

"என்ன, வைத்தனுங் கோயில்ல" இவர் ஏளனமாகச் சிரிப்பதை இவன் மிகவும் எரிச்ச லுடன் கண்டு கொண்டான்.

"ஒண்ணுமில்ல—"

"வைத்தனுங் கோயில்லீயா?"

இவன் தலையசைத்தான். கிழத்துக்கு எல்லாம் தெரிகிறது என்று தன்னுள்ளே சொல்லிக் கொண்டான்.

பக்கிரி, சுருட்டைக் கையில் எடுத்துக் கொண்டு புகையை இவன் மூஞ்சுக்கு நேரே ஊதிவிட்டு உடல் குலுங்கக் குலுங்க நகைத் தார். மரம் அறுக்கும் வாளால் கபடம் நிறைந்த இவர் கழுத்தை மெல்ல மெல்ல அறுக்க வேண்டும் போல இவனுக்குத் தோன் றியது. வலது காலைத் தூக்கி மரத்தின்மேல் வைத்துக் கொண்டு, இடது காலைத் தொங்க விட்டுக் கொண்டு கொஞ்சம்போல பின்னுக்கு நகர்ந்து உட்கார்ந்து கொண்டு, "தங்கராசு கள்ளெ இங்க கொண்டா" என்றார்.

மரத்துண்டின்மேல் அவன் வெகு கவனத்தோடு கள்ளையும், கறியையும் கொண்டு வந்து வைத்தான். கள்ளிலிருந்து திடீரென்று மொச்சை நொடி கிளம்பியது. பக்கிரி ஒரு முறை சுருட்டை நன்ருக தம் இழுத்து, நெருப்பை மரத்துண்டில் உதிர்த்து, "எலே, நீ சாப்பிட்டாச்சா" என்று கேட்டார்.

"சாப்பிடணும்"

"போய் நெறைய தின்னூ—" என்று சொல்லி அவனைப் பார்த்துப் பல்லெல்லாம் வெளியில் தெரியும்படியாகச் சிரித்தார். அவனே, பொங்கி வரும் சிரிப்பை, கைகளால் மறைத்து அடக்கிக் கொண்டு நிலவொளியில் நொண்டியடித்துக் கொண்டுத் தன் நிழலைப் பிடிக்கத் தாவித் தாவிச் சென்ருன்.

பக்கிரி கள் சட்டியை எடுத்து எதிரே வைத்துக் கொண்டார். கள்ளின் மேலிருந்த பன்னுடையைக் கவனத்தோடு எடுத்து உதறி ஒரு பக்கமாக வைத்துக் கொண்டு கள் சட்டியைத் தூக்கிக் கண்களின் அருகே கொண்டு வந்து பார்த்தார். ஈயா, பெரும் எறும்பா என்று தீர்மானிக்க முடியாத நிலையில் என்னவோ மிதப்பது தெரிந்தது. பன்னுடையை எடுத்து, இரண்டாக மடித்து கள்ளினுள் அமிழ்த்தி ஒட்டி மேலே தூக்கினுர். பன்னுடை தூசிகளையும் பூச்சிகளையும் அரித்துக் கொண்டு வந்தது. அதை ஒரு பக்கமாக வீசிப் போட்டுவிட்டு முருகேசனைப் பார்த்துக் கொண்டு, "மாப்பள, பூச்சிப் பொட்டெல்லாம் கள்ள ஒன்னும் பண்ணுது" என்ருர்.

அவன் அதை ஏற்றுக் கொள்வது மாதிரி தலையசைத்தான்.

"இப்படி வந்து பக்கத்துல குந்து மாப்பள"

இவர் கொக்குகறி குழம்புச் சட்டியை எடுத்து நடுவில் வைத்துக் கொண்டு ஒரு கிண்ணியில் கள் ஊற்றி அவன் பக்கம் நீட்டினுர். பவ்வியமாகக் குனிந்து அதை வாங்கிக் கொண்டு இவர் பக்கம் நெருங்கியமர்ந்தான்.

"குடிங்க மாப்ள"

இவர் தண்ணீர் குடிப்பது மாதிரி கிண்ணியின் விளிம்பில் உதடுகளைக் குவித்து உறிஞ்சிக் குடித்தார். இவன் ஒரு மிடறு குடித்துவிட்டு இவரையே பார்த்துக் கொண்டு இருந்தான். இவன் மனம் கமலத்தை இன்று காணமுடியாதது போனது பற்றி வருந்திக் கொண்டிருந்தது. இரண்டு நாட்கள் சென்று வீணில் திரும்பினன். இன்று கட்டாயம் வரச் சொல்லி இருந்தாள். உவப்பாக கழிய வேண்டிய இரவு, வெறும் குடியில் ஒரு கிழத்துடன் முடிவதில் இவன் எரிச்சலுற்ருன். கிண்ணியை ஒரு கையிலிருந்து இன்னொரு கைக்கு மாற்றிக் கொண்டான்.

"ஆச்சா" இன்னொரு கிண்ணி நிரப்பிக் கொண்டு கேட்டார்.

"கொஞ்சம் இருக்கு"

"ஒரு கிண்ணிக்கு இம்மாம் நேரமா"

கிண்ணியைக் கையில் எடுத்துக் கொண்டு மரத்திலிருந்து கீழே இறங்கித் தரையில் நின்று கொண்டு வானத்தை நிமிர்ந்து பார்த்து,

"கையில கள்ளிருக்கு
வானத்துல நெலவுயிருக்கு
கொக்குக் கறியிருக்கு
—குட்டி
கொக்குக் கறியிருக்கு"

என்று ராகம் இழுத்துப் பாடிக் கொண்டு குடித்துக்கொண்டு இவனைப் பார்த்துச் சிரித்தார். இவன், அவர் ஆட்டத்தையும் பாட்டையும் ரொம்பவும் ரசித்தான். கிழம் ரொம்பவும் விசித்திரமானதுதான் என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டான்.

"கள்ளு எப்படி மாப்பள"

இவன் பெருந்தொடையில் தட்டினுர்.

"அமிர்தங்க மாமா"

"தென்பாதி கள்ளுக்குத் தனி ருசி"

ஒரு காலைத் தரையில் நன்ருகப் பதித்துக் கொண்டு ஒரு சுற்று சுற்றினுர். இன்றிரவு வேடிக்கையாகக் கழியுமென்று இவனுக்குத் தோன்றியது. அவசரம் ஏதுமில்லாமல் நிதானமாகக் கள்ளைக் குடித்துவிட்டு, கிண்ணியைக் கீழே வைத்தான்.

"கள்ளுக்குக் கறி கொண்டாட்டம்
கறிக்குக் கள்ளு கொண்டாட்டம்
ராமு மவன் பக்கிரிக்கு ரெண்டுங் கொண்டாட்டம்
ரெண்டுங் கொண்டாட்டம்"

கையைத் தரையில் ஊன்றி குனிந்து குட்டிக்காணம் போட்டார். இவர் குரல் தனியாக வெகு தூரம் வரையில் கேட்கும்படியாக ஒலித்தது. முருகேசன் மரத்தில் நன்ருகச் சாய்ந்து கொண்டு கண்களை மூடிக் கொண்டான்.

நாய் இவன் தலைக்கருகில் வந்து குரைத்தது. இவன் படுத்தபடியே ஒரு கல்லை யெடுத்துப் போட்டான். நாய் பின் வாங்கி குரைத்துக் கொண்டே சென்றது. அதன் குரல் அமுங்கி அடங்கியது.

தங்கராசு எழுந்து வந்து, "கருப்பா இங்க வா" என்று நாயை அழைத்துக் கொண்டு சென்ருன்.

பக்கிரி மரத்தில் ஏறி உட்கார்ந்து கொண்டு இன்னொரு கிண்ணி கள் ஊற்றிக் கொண்டார். மீசையைத் திருகி மேலே விட்டுக்கொண்டு யோசிக்கையில், குடிப்பது ஒரு சுகானுபவமாகவே இருந்து வருவதாகத் தோன்றியது. நிலவொளியில் பேசிக் கொண்டு— பாடிக்கொண்டு— ஆடிக்கொண்டு குடிப்பது நேர்த்தியான செயலாகவே பட்டது.

குடித்து, ஒருநாள் சின்ன சண்டை யொன்று போட்டது தெளிவில்லாமல் நினைவில் படர்ந்தது. அதுவும் இதுபோலவே நிலவொளியில் நடந்திருக்கலாம் என்பது தீர்மானிக்கமுடியாத நிலையில் இருந்தது.

'அப்போது தனக்கு இருபது இருபத்தோறு வயது இருக்குமா? மீசை லேசாக அரும்பிக் கொண்டு வந்தது. உதடுகளுக்கு மேல் வளரும் மயிரை கை அடிக்கடி வருடிக் கொண்டிருந்த காலம் அது. ஏதோ ஒரு காரியமாக வடகரைக்குப் போய்விட்டு இரவில் திரும்ப வேண்டியிருந்தது. கூட ராமு வந்தான். மோடாக்குடியன் நிறைய குடித்துக் கொண்டே இருப்பான். அவன் தான் கள் வாங்கிக் கொடுத்தான். குடிக்க குடிக்க இன்னும் ஊற்றினன். பட்டாளக்காரன். நிதானம் இழக்காமல் பேசிக்கொண்டு குடித்தான். இவனை மிஞ்சவேண்டுமென்று ஒரு எண்ணம் திடீரென்று தோன்றியது.

'மாப்ள போதும்'

கிண்ணியை வாங்கிக் கீழே வைத்தான் ராமு.

'நீங்க'

'நான் இன்னும் ரெண்டு போடுவேன்'

'நானுந்தான்'

அவன் விசித்திரமாகப் பார்த்தான்.

'அப்ப போடு'

மேலும் இரண்டு கிண்ணி இறங்கியது.

ராமு, மேல் கை வந்து 'பக்கிரி படுத்துட்டு காலயில போவோம்'

'நான் நடப்பேன்'

அவன் பெரிதாக நடந்து கொண்டு எழுந்தான். நடக்க நடக்க வேகம் கூடியது. இரண்டு மைல் தூரம் வந்ததும், கால் தரையில் பாவாமல் துவளுவது போல தோன்றியது. ராமு மரத்தடியில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டு முண்டாசை அவிழ்த்து இறுக்கிக் கட்டிக்கொண்டான். கொஞ்சம் போல திரும்பி 'குந்து பக்கிரி' என்று கையைப் பிடித்திழுத்து உட்கார வைத்தான்.

பக்கிரியின் மனம் திடீரென்று முரண்டு பிடிக்க ஆரம்பித்தது. அவர் கையை உதறினர்.

'அட குந்து மாப்பள' பக்கிரி சிவப்பு பட்டுத்துண்டை பிடுங்கி உதறிவிட்டு விட்டு பெரிதாகச் சிரித்தான் ராமு.

பக்கிரி அவன் பக்கம் திரும்பிப் பார்த்தார் என்ன பதில் இதற்கு உரைப்பது என்று தெரியவில்லை. இவனும் என்னைப்போலவே நிறைய குடித்திருக்கிருன். வெறி ஏறிக் கொண்டு இருக்கிறது. ஆனல் இன்னும் நிதானம் இழக்கவில்லை. நிதானம் இழந்துகொண்டு வருகிருன் போலும்,

இவன் அழைப்புக்கு என்ன பதில்?
குடியில் தன்னை இழந்து நிற்கிருனா?
இல்லை பட்டாளக்காரன் என்ற
கோதாவில்
சண்டைக்கு அழைக்கிருனா?

தீர்மானிக்கவியலாத நிலையில், கண்களைத் தாழ்த்தி, கைகளைப் பின்னுக்குக் கட்டிக் கொண்டு அவனையே பார்த்துக் கொண்டிருந்தார். மணலில் நீண்டுகிடந்த பட்டுத் துண்டை காலால் எட்டித் தள்ளினன் ராமு. பக்கிரி அவசரமே இல்லாதவர் போல, ஓரடி முன்னே எடுத்து வைத்து, "எங்க இன்னொரு வாட்டித் தள்ளு"

'மாட்டனா?'

'தள்ளேன் ,பார்ப்போம்'

இடது காலால் துண்டை மணலில் ஒரு அறக்கு அறக்கினர் ராமு. இவர் மயிர் கால்கள் குத்திட்டன. இரண்டடி பின்னுக்கு நகர்ந்து, திடீரென்று அவர் வயிற்றில் தலை முட்டித் தரையில் வீசிப்போட்டார்.

அவர் கைகளையும் கால்களையும் உதறிக் கொண்டு பெரிதாகக் கத்திக் கொண்டு மணலில் விழுந்தார். இடுப்பில் வலி ஏறி, மார்புக

குள் இறங்குவது போல் இருந்தது. கண்களைத் திறந்து பார்க்கையில் இவர் கால் மார்பில் ஏறியிருந்தது. பலத்தையும் தைரியத்தையும் இழந்தவர் போல, கண்கள் சொருகிக் கொண்டுப் போக இவரைப் பார்த்தார். நான்குக் கண்களும் ஒரு நேர்க்கோட்டில் நின்றன.

'என்ன மாப்பள, தமாஷ்க்கு பண்ணிஞ நிஜமாகவே சண்டைக்கு வந்துட்டியே'

கால் மார்பிலிருந்து தரையில் இறங்கியது.

ராமு கஷ்டப்பட்டுக் கொண்டு புரண்டு மணலில் கையூன்றி எழுந்தார். துண்டையெடுத்து உதறி பக்கிரி தோளில் போட்டு, 'நம்ப மாப்பளகிட்ட ஒருத்தன் எதிர நிக்க முடியுமா? என்று கேட்டார்.

தனக்கு இன்னும் நல்ல ஞாபகசக்தி இருக்கிறதே என்று பக்கிரி வியந்து கொண்டார்.

முருகேசன் காலியாக இருந்த இவர் கிண்ணியில் கள் ஊற்றி நிரப்பினன். கொக்குக் கறியைப் பல்லில் வைத்துக் கடித்துக் இழுத்தார் இவர். எலும்பு பல்லில் பிடிபடாமல் நழுவியது. அதைத் தூக்கி எறிந்துவிட்டு கிண்ணியை எடுத்துக் கொண்டுபோய் மணலில் உட்கார்ந்து கொண்டார்.

''தம்பி இப்படி வாங்க''

முருகேசன் அவர் பக்கத்தில் சம்பணங் கட்டி உட்கார்ந்து கொண்டான். அவர் இவன் தொடையில் தட்டிப் பெரிதாகச் சிரித்தார். இவன் பீடியைப் பற்ற வைத்துக் கொண்டு புகையை வேகமாக ஊதிவிட்டு விட்டு வானத்தை நிமிர்ந்து பார்த்தான். நிலவு அலுமினியத் தட்டு போல பறந்து செல்வதாகத் தோன்றியது.

''இந்தக் கள்ளுக்கே இங்க தங்கிடலாம் மாப்பள''

இவன் சிரித்தான்.

பக்கிரி மணலில் கால்களை நன்ருக நீட்டிக் கொண்டார். கைகளைப் பின்னுக்கு வைத்துக் கொண்டு, ''தம்பி, இத கேளுங்க''

'சொல்லுங்க மாமா''

''சிங்கப்பூரிலே இருந்து வந்ததும், ரெண்டு வருஷம் சும்மா சுத்து சுத்துன்னு சுத்தினேன். போகாத இடமில்ல. எங்கயாச்சும் தங்கிஞ போதுமின்னு தோணுச்சு. அப்ப

# கசடதபற

ஜூன் — ஜூலை மாத இதழ்கள்

ஜூலையில் வெளிவரும்.

ஆசிரியர்

---

ராஜா ஐயர் ஞாபகம் வந்துச்சு. அங்க போனேன. அவுரு வைத்திஞங் கோயில்ல தாசி வச்சுக்கிட்டு இருந்தாரு. நீ இங்க கெடயின்னு நம்பள போட்டாரு. நாலு மாசம், வண்டி சரியா ஓடுச்சு. நாளு ஆக ஆக தாள முடியல. நேரா ஐயர்கிட்டப் போய், 'சாமி மிஞ்சு போச்சுன்னு' கால்லெ உழுந்தேன். முதல்ல, அவருக்குப் புரியல. விபரமா சொன்னதும், இடி இடியின்னு சிரிச்சு 'போடா, மட்டிப் பயல. அதுக்கா உருவுரே போடா போய் சும்மா அங்கேயே கிட'ன்னு சொன்ஞர்.

ஆஞ, நம்மாளே போகமுடியல. அப்படியே பொடி நடையா நடந்து குமாரசாமி படையாச்சிக்கிட்ட வந்தேன். அவரு ஒரு மகாஞ. குடுச்சுப்புட்டு அவரைப் பத்தி, நாத்த வாயால பேசக்கூடாது......

பக்கிரி கடைசி சொட்டுக் கள்ளை உறிஞ்சிக் குடித்து விட்டுக் கிண்ணியைக் கீழே வைத்தார்.

வெள்ளை நாய் இவர்களைச் சுற்றிக் கொண்டு வந்தது.

முருகேசன் கையில் ஒட்டி இருந்த மணலைத்தட்டிக் கொண்டு எழுந்தான்.

''என்ன மாப்பள கிளம்பிட்டீங்க''

காலுக்குக்கீழே இருந்த கிண்ணியை எட்டி உதைத்தார்.

''ரொம்ப தண்ணீங்க மாமா''

''இதுயென்ன தண்ணி இன்னும் ரெண்டு கிண்ணி போடுவேன்''

''நீங்க போடுவீங்க''

''ஏன்? உன்ஞல முடியாதா''

அவர் இவன் பக்கமாக வந்து தோள்மீது கை வைத்தார். இவன் கால்களைத் தரையில் அழுத்திக் கொண்டு விசித்திரமாக இவரை நோட்டம் இட்டான். அவர் கை தோளிலிருந்து உயர்ந்து, இவன் முண்டாசைப் பற்றி இழுத்துப் பறக்க விட்டது. காற்றில் துவண்டு செல்லும் துண்டைப் பார்த்து, ஆனந்தத்தோடு கைக்கொண்டி மேலே எழும்பிக் குதித்தார். கீழே விழுந்த துண்டை, நாய் ஓடி வந்து, கவ்வி இழுத்துக் கொண்டு சென்றது. நாயைப் பிடிக்க தங்கராசு எழுந்தான்.

பக்கிரி இவனுக்கு முன்னே வந்து நின்று கொண்டு, 'மாப்பள, ஒரு கை பார்க்கலாமா?'

இவன் அவரை ஆழ்ந்து நோக்கினன்.

''என்ன சொல்லுற''

''நாளைக்கு வச்சுக்கலாம்''

''இன்னக்கி என்ன?''

''வேணும்?''

''பயமா இருக்கா மாப்பள''

இரண்டடி பின்னல் சென்ற பக்கிரி திடீரென்று குனிந்து மணலையள்ளி இவன் மூஞ்சியில் வீசினர். இவன் முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டான்.

''மாப்பிள்ளைக்கு ரோசம் கம்மிதான்''

இவன் மேல் பாய்ந்து மார்பில் ஒரு குத்து விட்டு, பின்னல் நகர்ந்து கொண்டு சிரித்தார்.

உதட்டைப் பல்லால் கடித்துக் கொண்டு அவரையே பார்த்துக் கொண்டு நின்ருன். அவர் குனிந்து மெல்ல முன்னேறி, அவர் புட்டத்தில் ஒரு உதை கொடுத்தான். இவர் கைகளைப் பரப்பிக் கொண்டு, மூஞ்சி மணலில் சொருக விழுந்தார்.

நாய் குரைத்துக் கொண்டு இவன் மேல் பாய்ந்தது. கைகளையும் கால்களையும் வீசி நாயைத் துரத்தினன். நாய் மெல்ல மெல்ல பின் வாங்கியது. தங்கராசு பக்கிரியின் பக்கத்தில் உட்கார்ந்து, முகத்தில் படிந்திருந்த மணலைத் தட்டினன்.

மேகங்கள் அகல, நிலவு பிரகாசமாகத் தெரிய ஆரம்பித்தது.

பக்கிரி மெல்ல கையூன்றி எழுந்து நின்று சுற்றும் முற்றும் பார்த்தார்.

''பய, உதையில் ஓடிட்டானு?''

தங்கராசு பெரிதாகத் தலையசைத்தான்.

---

# பிகாஸோ என்னும் பாதிப்பு

## தியோடோர் பாஸ்கரன்

''Art has neither a past nor a future. Art which is powerless to affirm in the present will never come to its own.'' PICASSO

பிக்காஸோவின் கணிப்பின் படியே பார்த்தாலும் கலை வரலாற்றில் அவருக்கு ஒரு தனியிடம் உண்டு. அது எவ்வளவு உன்னதமான இடமென்பது கலை வரலாற்று ஆசிரியர்களுக்குத் தெளிவாக இன்னும் பல ஆண்டுகள் ஆகலாம். பிக்காஸோ தான் வாழ்ந்த காலத்தை எவ்வளவு பாதித்திருக்கிருர் என்பதே இன்னும் தெளிவாகாத ஒரு விஷயம். அவரது மௌகின் மாளிகையிலும், பாங்குகளின் பாதுகாப்பு அறைகளிலும் இன்னும் காட்சிக்கு வராத பிக்காஸோவின் நூற்றுக்கணக்கான சிற்பங்களும் கேன்வாசுக்களும் அடைப்பட்டுக் கிடக்கின்றன.

இது வரையில் காட்சிக்கு வந்த பிக்காஸோ படைப்புக்களே கலையுலகில் ஒரு புதிய யுகத்தைப் படைத்து விட்டன. தான் வாழ்ந்த காலத்திலேயே கலையுலகை—கலையுணர்வை தன் படைப்புக்களால் இவர் பாதித்தது போல் வேறெந்த ஓவியரும பாதித்ததில்லை.

இந்நூற்ருண்டின் ஆரம்ப வருடங்களில் காகின், மானே, ஸ்டீன்லென், சிசேன் போன்ற impressionist ஓவியர்களால் இவர் சிறிது பாதிக்கப்பட்டிருந்தாலும் எண்ணற்ற படைப்புக்களைச் சிருஷ்டித்தது இவரது Blue Period, pink Period களில் அப்பாதிப்பு அறவே மறைந்து விட்டதெனலாம். பிக்காஸோ என்ற தனி சகாப்தம் இக்கால கட்டத்தில் தான் பிறந்தது.

1909-இல் Demoi selles Avignon- என்ற ஓவியத்தின் மூலம்-ஆடையற்ற ஐந்து பெண்கள் 'விகாரப்' படுத்தப்பட்ட முகங்களுடன்-கலையுலகில் ஒரு பரபரப்பை உண்டு பண்ணினூர். இதைக் கண்ட ஓவிய விமர்சகர். பிக்காஸோ தீர்ந்தான்என்ருர்கள். தரித்திரத்தில் உந்தப்பட்ட தற்கொலை எண்ணமே இவ் ஓவியமாக மாறி இருக்கிறது என்ருர்கள். ஆனல் இச்சித்திரமே Cubism எனும் புதிய ஓவிய முறைக்கு முதற்படியானது. தொடர்ந்து சில ஆண்டுகள் பிக்காஸோ வரைந்த ஓவியங்கள் க்யூபிஸத்தை நவீன பாணி ஓவியத்தின் முன்னேடியாக நிலை பெறச்செய்தது.

சக ஓவியர்கள் தட்டிக் கொடுத்து பாராட்டிக் கொண்டிருந்த பிக்காஸோ க்யூபிஸ ஓவியங்களால் (after the fall-1908 woman with pears-1909) அவர்கள் பிரமிக்கும் அளவிற்குத் தனித்து வளர்ந்து தன்னைச் சூழ்ந்திருந்த அன்னுள் வரை தன்னைப் பாதித்து வந்த கலாச்சார சூழ்நிலையிலிருந்து வேறு பட்டு-அச் சூழலையே பெரிதும் பாதிக்கும் ஒரு கலைச் சூருவளியாக மாறினூர்.

பிரஞ்சுக் கலையுலகை-அதன் பாரம்பரியத்தை க்யூபிஸம் புயலெனச் சாடியது. ஓவிய ரசிகர்களின் பார்வையை தெளிவு படுதத வேண்டும், ஓவியக் கலையின் எல்லைகளை விரிவு படுத்த வேணடும் என்று பிக்காஸோ முயன்றதின் விளைவே இது.

க்யூபிஸம் ஒரு புதிய பாஷை. புலன்களை எட்டுவதற்கு - தொடுவதற்கு பிக்காஸோவும் சக ஓவியர் பராக்கும் கண்ட புதிய அணுகு முறை. ஒரு பொருளை பல கோணப் பாாவையால்தான் முழுமையாக அறிய முடியும் என்பது க்யூபிஸ்டுகளின் வாதம்.

நீக்ரோ சிற்பங்களில் தான் கண்ட சில அடிப்படை அம்சங்களை, தன் ஓவியத்தில் பிக்காஸோ பயன்படுத்திக் கொண்டார். விளை கோடுகளை விடுத்து ஒரு பொருளின் அத்யந்த உருவத்தை ஜியோமென்றிக்கல் ஷேப்பில் காண்பித்தார் பிக்காஸோ. ஒரு மனித முகத்தைப் பக்க வாட்டில் சித்தரித்தாலும, மறுபக்கம் இருக்க வேண்டிய கண்ணையும் காதையும் புத்தகத்தை விரித்தாற்போல பக்கத்திலேயே க்யூபிஸ சித்திரங்களில் தீட்டினூர், (young girl before a mirror-1932)

I paint what I see என்ருர் பிக்காஸோ. அவரது பார்வை ஆத்மார்த்தமான பார்வை. பாரீஸ் ஓவியர்களில் அவல நிலையைப் பிரதி பலித்த அவரது ஆரம்ப கால ஓவியங்களும் மனைவி ஒல்கா அவரை விட்டு விலகிய போது தீட்டப்பட்ட woman's head and Self Portrait-1929- முதலிய சிருஷ்டிகளும் இரண்டாம் உலகப்போர் மூண்டதும் படைத்த Cat eating a bird-1932 போன்ற ஓவியங்களும் பிக்காஸோ பாணி-ஆத்மார்த்த பார்வையின் ஆழத்திற்கு உதாரணங்கள்.

ஸ்பெயின் உள் நாட்டுப் போரால் மனம் நொந்து பொங்கிச் சீறி 1937ல்இவர் படைத்த Guernica என்ற $11' \times 5\frac{1}{2}'$ அளவுள்ள தைல ஓவியமே இவ்வரிசையின் உச்சக் கட்டம். இப்படைப்புக்களின் ஈர்ப்பு இவைகளில் காணப்பட்ட தீவிரமான அறிவுப் பாங்கே.

பிக்காஸோவின் பாலுறவு வாழ்க்கை கலையுலகில் பிரசித்தமானது. இதற்கும் இவரது படைப்புக்களுக்கும் இருந்த நெருக்கமே இதற்குக் காரணம். ஒரு பெண்ணும் இவருடன் நிலையாக வாழ்ந்ததில்லை. பெண்களைக் கொடுமைப் படுத்தி, வெறி கொண்டு சிரிப்பாராம் பிக்காஸோ. இதனல் இவரது மனைவி ஒல்காவிற்குப் பைத்தியமே பிடித்து விட்டது. பாலுறவு வாழ்வில், இவர் மிகவும் திருப்தி அடைந்திருந்த காலம் மாரி தெரிசேயுடன் கழித்த வருடங்களே. அப்போது இவர் தீட்டிய சமய உணர்வு ஓவியங்களும்-மற்றச் சித்திரங்களும் புலனின்பங்களின் உச்சம். தான் ஒரு பொலிகாளை போலிருக்கவேண்டும் என்ற ஆசையே காளைகளை அடிப்படையாக ஓவியமாக்கியது என்போரும் உண்டு.

பிக்காஸோவின் மண வாழ்வின் நிலையாமையை விமரிசிக்க வந்த ஆர்தர் கொய்ஸ்லர் கூறுகிருர்.

"The incompatibility is not between the characters, but between the temperament of genius and the institution of monogamy God knows, it is a britle affair even for ordinary mortals, in case of genuises like Picasso type it reduces itself to absurdity' (THE OBSERVER 3-3-65)

இக்கால அறிவு ஜீவிகளுக்கு வாழ்வின் அர்த்தமற்ற தனமை, அவ்வப்போது வந்து தாக்கும வெறுமை ஒரு பெரிய பிரச்சனை ஆகி நிற்கிறது. இதயமாற்று ஆபரேஷன், சந்திரப் பயணம், உயிரணுவிற்கு ஆதாரமான DNA.வை செயற்கை முறையில தயாரித்தது இவையாவும் வாழ்வெனும் புரியாப் புதிரை மேலும் பெரிய புதிராக்கிக் காட்டுகிறது. இக் கட்டத்தில் அமெரிக்க மனேதத்துவ நிபுணர் ரோலாமே நம்பிக்கைக் குரல் கொடுக்கிருர். பிராய்டு மனிதப் பிரச்சனைகளை அணுகுவதில் மிகக் குறுகிய நோக்கங் கொண்டு மனித-will-சக்தியை சரியானபடி கணிக்காமல் விட்டுவிட்டார் என்பது இவர் கூற்று. ●

## சரசுவதி

பாலாழி ததும்பும்
அம்பர சூனியத்தை
படிவமாக்கி
தற்சண அனந்தத்தை
காலவரைக்குள் ளிழுத்து
நாமங்கள் சூடி
நாதத்தை கானமாக்கி
அடையாளங்களைக் கண்டு
அதிசயங்கள் என்று
பேதலித்தோம்.

முடியைக் கண்டோமென்று
குடுமியை ஆட்டுகிறான் பாப்பான்

நாங்கள்,
இரணியன் வீட்டிலே
டியூஷன் சொல்லுகின்றோம்
கல்வியையும் கலையையும்
வளர்த்து பெருக்கிறோம்.
பிரகலாதன்
எங்களுக்காக
ரயிலடியில் காத்திருக்கின்றானாம்.
கவணிலும்
கல்வீச்சிலும்
காலத்தைப் போக்குவதால்
உன் வீட்டிற்கு வர
அவகாசமில்லை.
பரி நரியாகிறது.
பீரங்கிகள் பெறுகின்றன பிணங்களை,
இது உனக்கு
நாங்கள் செய்யும் பூசனைகள்

புதுயுகப் பிறப்பின்
பிரசவ வேதனைகள்

கோபுரங்கள் மீது
கொடி கட்டி பறத்தி
ஒலி பெருக்கியால்
உலகத்தைப் பிடித்து
உன்னை
குச்சிலிலாக்கி
காசுக்கு விற்கின்ற
எங்களுக்கு
வலுவைக்கொடு
உண்மையை
முகத்தோடு முகம் பார்க்க
தைரியம் கொடு.
ஆர்வம் கொடு.
உன்னை சேவிக்கிறோம்.

—காசியபன்

## மரிக்கும், உயிர்க்கும் ஓசைகள்

"ஹலோ"
வழக்கம் போல்
கையுயர்த்தி நானிரைந்தேன்
தூரத் தெரிந்த நண்பனிடம்.
அருகிருந்த ஃபாக்டரியின்
மெஷினிரைச்சல் ஓசைகளில்
என் ஓசை கரைந்தது

என்
உயர்த்திய கைக்குப்பதில்
அவனசைக்கும் கையும்
வாயசைப்பும் தெரிகிறது.
வழக்கம் போல்.

மெஷின்களின் ஓசைகளில்.
பழக்கமில்லா உயிர்ப்பு.

—கோ. ராஜாராம்

## 'ஆரம்பம்'

இங்கே வருமுன்னர்
இருந்தவை
பெரும் பாறை,
ஓயாமல் கூச்சலிடும்
புரண்டாடும் இக்கடல்
பனிமலை
வெயிலில் பளபளக்கும்
பேராறு
செம்மண், களிமண், வண்டல் மண்
காற்று எழுப்பும் பெரும் புழுதி
எல்லாம் எங்கெங்கோ
இயங்குகையில்
உன் வயிற்றில் ஹோம குண்டம்
கனன்று கனன்று பந்தாய் விரியும்
தீப்பூக்கள் உன்னுள்
மேலும் கீழும் ஆகாயம்
எங்கும் நிசப்தம்
பசுமை

ஒரு தூசியின் ஒரு கோடிப் பங்கில்
ஒரு சிற்றணுவாய்
நான் தோன்றினேன்,
நக்ஷத்ரக் கண்கள் சிமிட்ட.

— ஆத்மாநாம்

Puplished by N. Mahaganapathy, 47, Nallathambi Mudali Street, Madras-5. Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K, Amman Koil St., Madras-4. Edited by Krishnamurthy No. 1, Devadi Street, Madras-4.